5th May 1962]

(இ) ஆம் என்றால், எப்போது முதல்?

THE HON. SRI V. RAMAIAH : (அ) & (இ).—Kathabetty-Idhuhatty road from mile 0/0 to mile 6/0 has been taken over by the Highways and Rural Works Department from the Ootacamund Panchayat Union with effect from 1st April 1962.

SRI J. MATHA GOWDER : ஸார், உதகை காட் ரோடுக்கு எவ்வளவு தொகை ஒதுக்கப் பட்டிருக்கிறது, வேலை எப்பொழுது ஆரம்பிக்கப்படும்? அதை பஸ் ரூட்டாக மாற்றி அமைக்கப்பட எவ்வளவு காலம் ஆகும்? 30-வது கேள்வியில் கேட்டிருக்கும் கட்டபெட்டு ரோடுக்கு எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது? எஸ்டிமேட் பூர்த்தியாகி வேலை எப்பொழுது தொடங்கப்படும்?

THE HON. SRI V. RAMAIAH : எஸ்டிமேட் விவரம் என்னிடம் இல்லை. இந்த ரோடுகளையெல்லாம், ஹைவேஸ் டிபார்ட்மெண்ட் நேரிடையாக தங்கள் பார்வைக்கு எடுத்துக்கொண்டிருக்கிறது. அவைகளை நல்ல முறையில் பராமரிக்க ஏற்பாடுகள் செய்யப்படும்.

SRI V. KRISHNAMOORTHY : பஞ்சாயத்து யூனியன் ரோடுகளையும், மற்ற கிராம ரோடுகளையும் ஹைவேஸ் டிபார்ட்மெண்டில் எடுத்துக்கொள்ள என்னென்ன அடிப்படையில் செய்கிறார்கள்? பஸ்கள் செல்லும் பாதைகளையெல்லாம் சர்க்கார் எடுத்துக்கொள்வது என்ற ஒரு முடிவு இப்பொழுது இருக்கிறதா?

THE HON. SRI V. RAMAIAH : The hon. Member may put a separate question.

*Tea Plantation labourers (wages)*

* 31 Q.—SRI J. MATHA GOWDER : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தேயிலைத் தோட்ட தொழிலாளர்களுக்கு 1961-ம் ஆண்டு டிசம்பர் மாதம் முதல் பதினைந்து நயா பைசே இடைக்கால கூலி உயர்வு கொடுக்க வேண்டுமென்று கூலி நிர்ணய போர்டார் சிபார்சு செய்திருப்பது சர்க்காருக்குத் தெரியுமா?

(இ) அப்படியானால், இதுவரை இடைக்கால கூலி உயர்வு தோட்ட முதலாளிகள் கொடுக்காமல் இருப்பதற்குக் காரணம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) ஆம்.

(இ) தேயிலை கூலி நிர்ணய போர்டின் இடைக்கால சிபாரிசுகளின்மேல் இந்திய அரசாங்கத்தின் உத்திரவு 1962 மார்ச் 30-ந் தேதி இந்திய கெஜட்டில்தான் பிரசுரிக்கப்பட்டது. இந்திய அரசாங்கத்தினர் தேயிலை முதலாளிகளை தேயிலை நிர்ணயபோர்டின் இடைக்கால சிபார்சுகளை காலதாமத மன்னியில் நிறைவேற்றும்படியும் கேட்டுக்கொண்டுள்ளனர். தோட்ட முதலாளிகள் அவ்விதம் செய்கிறார்களா என்பதை இந்த அரசாங்கமும் கவனித்து வருகிறது.

[5th May 1962

**SRI J. MATHA GOWDER :** ஸார், 1961-வது வருஷம், டிசம்பர் மாதத்தில் கூலி நிர்ணய போர்டு 15 நயாபைசா உயர்வு கொடுக்க வேண்டும் என்று சொன்னதின் பேரில், தோட்ட முதலாளிகளால் அது கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனல், வேஜ் போர்டு தீர்மானம் செய்த பிறகு, 3, 4 மாதங்களுக்குமேல் கெஜட்டில் பிரசுரம் ஆகாமல் இருப்பதால் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே, இந்த மாதிரி தீர்மானம் வந்தபிறகு, உடனடியாக கெஜட்டில் பப்ளிஷ் செய்ய முயற்சி செய்வார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கெஜட்டில் பிரசுரம் செய்வதில் அனுவசியமான தாமதம் இல்லை.

**SRI K. PONNIAH :** தலைவர் அவர்களே, 1961, டிசம்பர் மாதத்தில் கூலி நிர்ணய போர்டு இடைக்கால கூலி உயர்வு கொடுத்ததற்கு மிகவும் மகிழ்ச்சி. 15 நயாபைசா உயர்வு கொடுத்திருக்கிறார்கள். அதே மாதிரி காப்பித் தோட்டத் தொழிலாளர்களுக்கும், கார்டமம் தோட்டத் தொழிலாளர்களுக்கும், இன்னும் அரசாங்க க்வினேன் தோட்டத் தொழிலாளர்களுக்கும் இந்த உயர்வைக் கொடுக்கும்படி சர்க்கார் சிபாரிசு செய்வார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இதற்குத் தனிக் கேள்வி வேண்டும்.

*Potato Seeds (Import)*

*29 Q.—**SRI T. KARCHA GOWDER :** கனம் விவசாய அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உருளைக்கிழங்கு விதைகள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து விவசாயிகளுக்கு விநியோகம் செய்யப்பட்டனவா ?

(இ) அப்படியானல், எவ்வளவு விதைக்கிழங்கு ?

**THE HON. SRI P. KAKKAN :** (அ) & (இ) A quantity of 47 tons and 14 cwt. of Great Scot variety of seed potatoes was imported during March 1962 from the United Kingdom (Scotland). The entire lot being a small consignment is being planted in State Seed Farms for multiplication. No seed was supplied to ryots from the imported stocks. The produce that will be got from these farms will be distributed to ryots in the next season.

**SRI T. KARCHA GOWDER :** நீலகிரி ஜில்லாவிலே உருளைக்கிழங்கு 20,000 ஏக்கரில் விவசாயம் செய்யப்படுகிறது. அதற்கு சர்க்கார் 53 டன்தான் விதைக்கிழங்கு கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். விவசாயிகள் மகாநாட்டில் 8,000 டன் விதை வேண்டுமென்று கோரப்பட்டிருக்கிறது. ஆகவே, அதிகப்படியான விதைகளை வழங்க எப்பொழுது ஏற்பாடு செய்யப்படும் ?

**THE HON. SRI P. KAKKAN :** நீலகிரி ஜில்லாவில் உள்ள உருளைக்கிழங்கு விவசாயிகளுக்கு அதிகப்படியான விதைகள் கொடுக்க அரசாங்கம் ஏற்பாடு செய்துவருகிறது. அதற்காகவே,